REGD. No. M. 6311

PHONE No. 55630

தனி இதழ்
ஒரு அணு
இலங்கையில் 10 சதம்

மலர் 1] [இதழ் 261

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர்.. அண்ணதுரை

"THE NAM NADU" A TAMIL DAILY! THE OFFICIAL ORGAN OF: THE D.P.F

சந்தா விபரம்

| | |
|---|---|
| உள்நாடு (இலங்கை உட்பட) | |
| ஆண்டு | ரூ. 24—0—0 |
| 6 மாதம் | ரூ. 12—0—0 |
| 3 மாதம் | ரூ. 6—0—0 |
| வெளிநாடு: | |
| ஆண்டு | ரூ. 30—0—0 |
| 6 மாதம் | ரூ. 15—0—0 |
| 3 மாதம் | ரூ. 7—8—0 |

சென்னை: சித்திரை 4உ வெள்ளி (16—4—54) ★ ★ ★ வெளியூர்: சித்திரை 5உ சனி (17—4—54)

# புதுவை பிரச்னை—பாரிஸ் சாகசம்!

## "கூட்டாக ஆளலாம்" என்கிறது!

## செனெட்டர்கள் சாய்கிறார்களா?

### பிரெஞ்சு நாட்டின் யோசனை!

புதுவையில் வீசும் விடுதலைப் போர்ப் புயலின் வேகம் பாரிஸ் பட்டினத்திற்குத் தெரிந்துவிட்டது—நிலைமையும் ஓரளவுக்குப் புரிந்துவிட்டதாகத் தெரிகிறது. எனவே, பிரான்சில் இப்போது ஒரு புது தினுசான யோசனை பேசப்பட்டு வருகிறது.

புதுவைப் பகுதிகளை, பிரெஞ்சு ஆதிக்கத்திலிருந்து விடுவிக்கவே கிளர்ச்சி நடைபெறுகிறது. இந்தக் கிளர்ச்சியை ஒழிக்க அடக்குமுறை வீசப்பட்டு வருகிறது ஒரு புறத்தில்—மறுபுறத்திலிருந்தோ, இந்த சாகசம் பேசப்படுகிறது!

புதுவைப் பகுதிகளில், இனி, பிரெஞ்சு அரசு மட்டுமின்றி இந்திய அரசும் சேர்ந்து ஆட்சி செய்யும் வகையில், ஒரு பங்காளித் திட்டம் வகுத்துக் கொள்ளலாம் என்று பிரெஞ்சு அதிகாரிகள் புது யோசனை கூறியுள்ளனர்.

இந்தக் 'கூட்டு அரசு' முறை பற்றி, செனெட்டர் பக்கிரிசாமி பிள்ளையிடம் கூறப்பட்டிருக்கிறதாம்.

இந்திய அரசைச் சாகசத்தால் வீழ்த்த பாரிஸ் முயல்கிறது.

புதுவைப் பிரச்னை பற்றிப் பேச, பாரிஸ் சென்றுள்ள செனெட்டர் பக்கிரிசாமிப் பிள்ளையும் ஜாக்பூர் என்பவரும், பிரெஞ்சு வெளிநாட்டு அமைச்சருடன் இரண்டு நாட்களாகப் பேசி இந்த முடிவுக்கு வந்துள்ளார் என்று தெரிகிறது.

இன்னும் இரண்டு கிழமைகள் இவர்கள் இங்கு தங்கி, இந்தத் திட்டம் பற்றிப் பேசுவராம்!

## சோவியத் பெருந்தன்மை!

★

ஆயுதங்களைக் குறைத்துக்கொள்ளவும், குறிப்பாக அணுசக்திக் கருவிகளை அடக்கி ஆளவும் வழிவகை காண்பதற்காக, கூடிப் பேசும் கமிட்டியில், இந்தியாவுக்கும் இடமளிக்க வேண்டும் என்று சோவியத் அரசு வலியுறுத்துகிறது. மற்றும் சைனா, செக்கோஸ்லோவேகியா, நாடுகளையும் இந்தக் கமிட்டியில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று சோவியத் கூறுகிறது.

புதுடில்லி ஏப். 16—இந்தியாவில் உள்ள ரயில்வே நிலையங்களின் பிரயாணிகளின் உபயோகத் துக்காக ஒரு காண்டீனும், 138 சாப்பாட்டு விடுதிகளும், 396 சிற்றுண்டி அறைகளும், 5,960 பலகார விற்பனை நிலையங்களுமாக மொத்தம் சுமார் 6,500 சிற்றுண்டி விற்பனை நிலையங்கள் உள்ளன.

## விஜயலட்சுமியார் இலண்டனுக்கு!

★

ஐக்ய நாடுகள் சபையின் தலைமைப் பதவிக் காலம் முடிவுற்றதும், விஜயலட்சுமிபண்டிட், இலண்டனில், இந்தியத் தூதுவராக்கப்பட இருக்கிறார்.

இப்போது இலண்டனில் உள்ள கேர் விலகிக் கொள்வது உறுதிப்பட்டு விட்டதாம். அம்மையார், இந்த புதுப் பதவி பெற்றால், உலகின் மூன்று முக்கியமான நாடுகளிலே பதவி வகித்த பெருமைக்கு உரியவராகிறார்.

ஏற்கனவே மாஸ்கோவில் தூதராக இருந்ததும், பிறகு அமெரிக்கத் தூதரானதும் நேயர்கள் அறிந்ததே.

## பாகிஸ்தானில் அரசியல் புயல் பலமாகிறது!

—o—

## 'போட்டி அரசு அமைத்திடுக!"

### பழைய புலிகளும் வெளிவருகின்றன!

லாகூர், ஏப். 15—பாகிஸ்தானில் அரசியல் புயல் பலமாகிக்கொண்டு வருகிறது.

கிழக்கு வங்கத்தில் கிடைத்த தோல்வியைக் கண்டு, முஸ்லிம் லீக் தலைவர்கள் அறிவு பெற்றதாகத் தெரியவில்லை.

'பாக் அரசியல் நிர்ணய சபையிலே லீகர்கள் ஆதிக்கம் செய்வது, இனியும் நியாயமாகாது; அந்த அரசியல் நிர்ணய சபையைக் கலைத்துவிட வேண்டும்; புதுசபை தேர்தல் மூலம் அமைக்கப்பட வேண்டும்,' என்ற கோரிக்கை அலட்சியப்படுத்தப்பட்டு விட்டது.

எனவே, இப்போது, பாக் அரசியல் நிர்ணய சபைக்குப் போட்டியாக பாக் மக்கள் அரசியல் நிர்ணய சபை ஒன்றை அமைத்து, காரியத்தைக் கவனிக்க வேண்டும் என்ற யோசனை பேசப்பட்டு வருகிறது.

இந்த 'போட்டி அரசு' யோசனையை வெளியிட்டவர் மேற்கு பஞ்சாப் சட்ட சபையில் உள்ள உறுப்பினர், கிப்பன் என்பவராவர். இவர் மைனாரிடி வகுப்பினர்.

முன்னாளில் காக்சார் இயக்கம் நடத்திவந்த அல்லாமா மஷ்ரீகியும் இப்போது வெளியே வந்திருக்கிறார். பாக் அரசியல் நிர்ணய சபை கலைக்கப்பட்டாகவேண்டும் என்று முன்னாள் காக்சார் தலைவரும் முழக்கமிடுகிறார்.

## சினிமா நட்சத்திரம் கோரக் கொலை

—(:)—

### வெட்டுண்ட கரங்கள் கோணிப் பையில்!

கொலையாளி பிடிபட்டான்

கல்கத்தா, ஏப். 15—கல்கத்தாவில் ஒரு, சினிமா நட்சத்திரம் கோரமாகக் கொலை செய்யப்பட்ட செய்தி அம்பலமாகி விட்டது. கொலை செய்ததாகக் கருதப்பட்டவனும், இப்போது போலீசாரால் கைது செய்யப்பட்டிருக்கிறான்.

கொலையுண்ட சினிமா நட்சத்திரத்தின் பெயர் மாயா சின்னா ஏப்ரல் 12-ந் தேதி சினிமாவில் வேலை இருப்பதாகச் சொல்லி மாயாவை அழைத்துச் சென்றனர், இருவர்! பெண், வீடு திரும்பாததால் போலீசுக்குத் தகவல் தரப்பட்டது.

ஏப்ரல் 14-ந் தேதி, கல்கத்தா வெலிங்டன் சதுக்கத்திலே கிடந்த ஒரு கோணிப் பையில், துண்டிக்கப்பட்ட இரண்டு கைகள் காணப்பட்டன.

காணாமற்போன தங்கள் பெண் மாயாவின் கரங்களே இவை என்று பெற்றோர், கரத்தில் இருந்த மச்ச அடையாளத்தைப் பார்த்தும், விரலில் இருந்த மோதிரத்தைப் பார்த்தும் கூறினர்.

மூன்று நாட்களாகப் போலீசார் தேடினர், இப்போது 26 வயதுள்ள ஒரு வங்காளி இளைஞனைக் கைது செய்திருக்கிறார்கள்.

## பாகிஸ்தான் பார்லிமெண்டில் குழப்பம்

—(:)—

## 'உட்கார்! போ, வெளியே!' என்று காட்டுக் கூச்சல்

### அமெரிக்க தூதரால் வந்த வம்பு

மியான்—முகமதலி மோதுதல்

கராச்சி, ஏப். 14—பாகிஸ்தான் பார்லிமெண்டில் கூச்சலும், குழப்பமும் ஏற்பட்டு, உறுப்பினர்களுக்குள் காரசாரமான வாய்வீச்சு நடைபெற்றது.

முஸ்லிம்லீக், கிழக்கு வங்க வட்டத்திலே படுதோல்வி அடைந்த பிறகு ஏற்பட்டிருக்கும் சூழ்நிலை, பாகிஸ்தான் பார்லிமெண்ட் நடவடிக்கை மூலம் நன்கு தெரிந்தது.

ஆதிக்கம் செலுத்தும் லீக் தலைவர்களின் போக்கைக் கண்டித்து பஞ்சாப் தலைவர் மியான் இப்திகாருதீன் பேசினார்.

கிழக்கு வங்கத்தில் முஸ்லிம் லீக் தோல்வியடைந்தது ஆனால், பாகிஸ்தான் மத்திய சர்க்காரின் நிலைமை இதனால் பாதிக்கப்படவில்லை என்று பாகிஸ்தானில் உள்ள அமெரிக்கத் தூதர் பேசினார்.

பாகிஸ்தானின் உள் விவகாரத்தில் தலையிட்டு, பேசியது தவறான போக்கு—எனவே பாகிஸ்தான் சர்க்கார் இதைக் கண்டிக்க வேண்டும் என்று மியான் இப்திகாருதீன் வாதிட்டார்.

அமெரிக்கத் தூதர் பாகிஸ்தான் பிரச்னை பற்றி பேசியது பெஷாவர் நகரிலாகும்.

மியான் இப்திகாருதீன் கொடுத்த கண்டனத் தீர்மானத்தை பாகிஸ்தான் பார்லிமெண்ட் தலைவர், தள்ளிவிட்டார். இந்தப் பிரச்னை, இந்தச் சபையில் விவாதிக்கப்பட வேண்டியதல்ல என்று காரணம் காட்டினார்.

மியான், இதைச் சட்டை செய்யாமல், அமெரிக்க தூதரையும், அவருடைய பேச்சைக் கண்டிக்காத லீக் தலைவர்களையும் பலமாகக் கண்டித்தார்.

லீக் தலைவர்கள், மியானின் போக்கைக் கண்டித்தனர்.

பார்லிமெண்டில் இதனால் கூச்சலும், குழப்பமும் ஏற்பட்டது.

"போ! வெளியே!" என்று பாகிஸ்தான் பிரதமர் முகமதலியும் வெளிநாட்டு மந்திரியும் கூவினர்.

பார்லிமெண்ட் நடவடிக்கைகளை வேடிக்கை பார்க்க அன்று வெளிநாட்டு தூதராலயத்தவர் ஏராளமாக வந்திருந்தனர்.

## ஈரான் எண்ணெய்

தெகரான், ஏப்ரல் 15—அரசியல் தகராறுகள் காரணமாக ஈரானின் எண்ணெய் (பெட்ரோல்) வியாபாரம் முடங்கிக் கிடந்தது. இதைப் போக்கி, மீண்டும் ஈரான எண்ணெய் உலக மார்க்கட்டில் விற்பனை செய்யப்படுவதற்காக, இப்போது ஈரான் தலைநகரில், உயர்தர அதிகாரிகளுடன், பிரிட்டிஷ் அமெரிக்க எண்ணெய் வியாபார நிபுணர்கள் பேச்சு வார்த்தை நடத்தி வருகிறார்கள்.

பிரிட்டனைச் சார்ந்த மூன்று கம்பெனிகளும், அமெரிக்காவிலுள்ள ஐந்து கம்பெனிகளும், கூட்டாக இலண்டனில் ஒரு அமைப்பு ஏற்படுத்திக்கொண்டு, ஈரான் எண்ணெய் வியாபார சம்பந்தமான அலுவலைக் கவனிப்பதென்று ஏற்பாடாகி வருகிறது.

## இந்தோ-சீன விடுதலைப் போர்

விமானங்கள் குவிகின்றன

இந்தோ-சீன மக்கள் பிரெஞ்சு ஆதிக்கத்தை எதிர்த்து நடத்திவரும் விடுதலைப் போரை ஒடுக்க அமெரிக்கா ஏராளமான போர் விமானங்களை பிரெஞ்சுக்குக் கொடுத்துதவி இருக்கிறது.

## பிரெஞ்சு ஆதிக்கத்தை எதிர்த்து உண்ணாவிரதம்

டில்லியில் உள்ள பிரெஞ்சுத் தூதராலயக் கட்டடத்தின் முன்பு, ஒரு சாது, 'பந்தாப்' என்பவர் உண்ணாவிரதம் இருந்து வருகிறார்.

புதுவைப் பகுதியில் பிரெஞ்சு அடக்குமுறையை எதிர்த்தே இந்த உண்ணாவிரதம் நடக்கிறது.

## சட்ட சபை உறுப்பினர் கைது

### இலஞ்ச இலாவணை வழக்கு

ஜப்பானில் நடவடிக்கை

ஜப்பானில் ஆளும் கட்சியினர் இலஞ்ச இலாவணத்தில் பெரிதும் ஈடுபட்டிருப்பதாகப் புகார் கிளம்பியிருப்பதை ஒட்டி சட்ட சபை உறுப்பினர்களைக் கண்காணித்து வருகிறார்கள்.

ஜப்பான் பார்லிமெண்ட் உறுப்பினர் இருவர் இப்போது இலஞ்சம் பெற்றதற்காகக் கைது செய்யப்பட்டுள்ளனர்.

கப்பல் கம்பெனித் தலைவர்கள் இருவரும் கைதாகியுள்ளனர்.

நம் நாடு
தி.மு.க. தின இதழ் ஆசிரியர்: அண்ணாதுரை

சென்னை 16—4—54 வெள்ளி

# 'பரமேஸ்வரா! – பரமேஸ்வரா!!'

"பரமேஸ்வரா! பரமேஸ்வரா!" என்று துதி பாடி, ஆலயம் சென்று தொழ விரும்புகிறார்கள், பழங்குடி மக்கள், காசியில்! பக்தி மட்டுமல்ல இதற்குக் காரணம்—இவ்வளவு காலமாக, ஆரியம் நெளியும் ஆலயத்துக்குச் செல்லாமலே அவர்கள் பக்திமான்களாகத்தான் இருந்து வந்தார்கள்—எனவே, இப்போது அவர்கள், காசி விசுவநாதரைத் தரிசனம் செய்தே தீரவேண்டும் என்று உறுதி கொண்டிருக்கிறார்கள் என்றால், பக்தி மட்டுமல்ல அதற்குக் காரணம்—உரிமை உணர்ச்சியே மிக முக்கியமான காரணம்.

"நீ நுழையலாம், நான் செல்லக்கூடாதா? நீறு பூசுவாய், ஆனால், நீசத்தனமான காரியம் செய்யக் கூசுவதில்லை! நயவஞ்சகத்தை நவநீதமாக்கிவிட்டாய், எனினும், 'நாதன் அருளை நான் பெற்று, பிறருக்கும் வழங்க வல்லேன்,' என்று பேசுகிறாய்; நீ, சென்று வந்த நேரம் போக மிச்ச நேரத்திலே, நாய் நுழையும்; பன்றி நுழையும்; ஆனால், நான் மட்டும் நுழையலாகாது என்று கூறுகிறாயே, நியாயமா? இன்னார் நுழையலாம், இன்னின்னவர் நுழைதல் ஆகாது என்று கூறும் அதிகாரம் உனக்கு யார் அளித்தது? நீ யார், இந்த அதிகாரம் செலுத்த? என் உரிமையைத் தடுத்திட நீ துணிந்தால், நான் ஏன் அதைச் சகித்துக் கொள்ள வேண்டும்?"—என்று கேட்கும் உரிமை உணர்ச்சி விறிட்டு எழுந்ததாலேயே, இன்று பழங்குடி மக்கள், 'நுழைந்தே தீருவோம்,' என்று முழக்கமிடுகிறார்கள்.

வைதீகர்கள், காசியை, முக்தி தரும் நகர் எழில் ஒன்று என்றும், அங்குள்ள தேவாலயத்துக்கு அபாரமான மகிமை உண்டு என்றும், அங்கு பரமேஸ்வரன், விசுவநாதன் என்ற திருப் பெயருடன் திருக்கோலம் கொண்டு எழுந்தருளி இருக்கிறார் என்றும், அவரைத் தொழுதால், பவப்பிணி ஒழியுமென்றும், 'சாலோக சாமீப சாயுச்ய' பதவியும் கிட்டுமென்றும், ஆசை சுரக்கும் விதமாகக் கதைகள் மூலம் கூறி வைத்திருக்கிறார்கள். எனவே, அங்கு சென்று தொழுது பலன் பெறலாம் என்ற ஆவல் இயல்பாக எழத்தான் செய்யும். ஆனால், அந்த ஆவலால் உந்தப்பட்டு பழங்குடி மக்கள் செல்லும்போது பாதையைத் தடுக்கிறார்கள்—அந்தப் பாதகத்தைப் 'பாரதப் பண்பாடு' என்றும் பேசி வருகிறார்கள். பதறுதா நெஞ்சம்!! எனவேதான், உரிமைக் கிளர்ச்சி உருவெடுத்தது!

ஒருபுறம் சிலுவையும், மற்றோர் புறம் பிறையும், 'சன்மார்க்கச் சத்தனம் இங்கே உண்டு; சகலருக்கும் கிடைக்கும்', என்று அழைத்தன—வர்ணாஸ்ரமச் சேற்றிலே இருந்து கரை ஏறி, பலப் பல இலட்சம் மக்கள், புது மார்க்கம் சேர்ந்தனர். பிறகே, வர்ணாஸ்ரமம் நிலைமையை உணர்ந்தது; நெளிந்து கொடுக்கத் தொடங்கிற்று; கோயிற் கதவுகள் திறந்தன; கொட்டு முழக்குடன் பழங்குடி மக்கள் ஆலயங்கட்கு அழைத்துச் செல்லப்பட்டனர்.

நாடு, ஒருபடி, முன்னேறிவிட்டது என்று நல்லோர் பாராட்டினர். இந்த நிலைமைக்குப் பிறகு, இப்போது, இந்தத் திங்கள், சென்ற கிழமை, சிறுமதியாளர்கள் சீறி எழுந்து, பழங்குடி மக்களை, காசி ஆலயத்துக்குள் நுழையவிடோம் என்று கொக்கரித்துள்ளனர்.

காசி, விஸ்வநாதர் ஆலயம் வைதீகக் கோட்டையாகக் கோலம் கொண்டிருக்கிறது. பழங்குடி மக்களை அந்தக் கோயிலில் நுழைய விடாமல் தடுத்தே தீருவதென்று சாது சன்யாசி வேஷத்திலுள்ள வைதீக வெறியர்கள் துணிந்துள்ளனர்.

ஒரு கிழமைக்கு மேலாக இந்தச் சிக்கல் வளர்ந்து வந்து கொண்டிருக்கிறது.

காசி, விஸ்வநாதர் ஆலயத்துள் எல்லோரும் செல்வது போலத் தாங்களும் சென்று, தொட்டுக் கும்பிடப் போவதாக, அரிஜனங்கள் அறிவித்ததை ஒட்டி, வைதீகர்கள் வரிந்து கட்டிக்கொண்டு, படை திரட்டிவிட்டனர்.

இந்த சனாதனப் படைக்கு சுவாமி கர்ப்பாத்ரிஜீ என்பவர் தலைவர். மதம் நாசமாகிறது என்று அழுதால் கிளப்பி, விவரமறியாத சில தாய்மார்களையும், சுவாமி, தன் படையில் சேர்த்துக் கொண்டுள்ளார்.

இடையே ஒரு சமரச முயற்சி செய்யப்பட்டது; ஆனால், மூன்று நாட்களிலேயே அந்த முயற்சி முறிந்து போய் விட்டது.

ராம்லகான் எனும் எம்.எல்.ஏ. ஒருவர், பழங்குடி மக்களின் சார்பாக நின்று போராடுகிறார்.

இரு சாராரின் கூட்டங்களும் நடைபெற்று, காசியில் கலகவாடை வீசலாயிற்று.

வைதீகர்கள் எத்தகைய எதிர்ப்பு உண்டாக்கினாலும், தாங்கள் ஊர்வலமாகச் சென்று விசுவநாதர் ஆலயத்துக்குள் நுழையப் போவதாக, அரிஜனத் தலைவர்கள் அறிவித்து விட்டனர்.

உடனே, வைதீகத் தலைவர்கள் கோர்ட்டில் மனு கொடுத்தனர். மாஜிஸ்ட்ரேட், தற்காலிகமாக ஒரு தடை உத்திரவு பிறப்பித்துள்ளார். இதனால், அரிஜன ஆலயப் பிரவேசம் நடைபெறவில்லை.

அரிஜனங்கள் சார்பான மனு, மே மாதம் 22-ந் தேதிக்குள் தாக்கல் செய்யப்படலாம் என்று கோர்ட் உத்திரவு பிறப்பித்திருக்கிறது.

அரிசனங்களைத் தடுத்து விட்டோம் என்று வைதீகர்கள் கொக்கரிக்கிறார்கள்.

வழக்கு தொடர்ந்து எங்ஙனம் நடைபெறும் என்பதல்ல நமது கவலை—ஆனால், மடிந்ததாக நாம் கருதிக் கொண்டிருந்த மமதை, இன்னமும் ஆர்ப்பரிக்கிறதே என்பது பற்றியே கவலைப்படுகிறோம்!

சில திங்களுக்கு முன்பு மற்றோர் தலத்தில், பழங்குடி மக்களுடன், கோயிலுக்குள் நுழையச் சென்ற வினோபா பாவேயை, வைதீக வெறியர்கள் தாக்கியே, விரட்டினர்.

சம உரிமைக்காகச் சட்டம் செய்தாகிவிட்டது.

சம உரிமைக் கொள்கையைக் குளத்தங்கரைக்காரர் தவிர, வேறெவரும் குறைகூறிப் பேசவும் துணிவதில்லை.

பல்வேறு பகுதிகளிலே, பழங்குடி இனத்தவர், பாராளு மன்ற உறுப்பினர்களாகவும், தலைவராகவும், அமைச்சராகவும் அமர்ந்துள்ளனர்.

அறிவாற்றலிலே, தாம் மற்ற எவருக்கும் தாழ்ந்தவரல்ல என்பதை எடுத்துக்காட்டும் விதத்திலே, பணிமனை பலவற்றிலே, பழங்குடி மக்களில் படித்தோர் பணியாற்றி வருகின்றனர்.

ஆனால், எவ்வளவு 'ஜோதி' காட்டினாலும், பழைய இருள் ஒழிய மறுக்கிறது—வெண்ணிலவை விழுங்கிவிடும் கருமேகம் போல, வைதீக வரட்டுப் பிடிவாதம் பட்டுகிறது.

காசியிலே, இதுபோன்ற கண்றாவிக் காட்சி நடைபெறுகிறது—டில்லியில் ஒருவர் அமைச்சராக இருக்கிறார் – ஊரறிந்தவர் – ஜகஜீவன்ராம்; இங்கு சென்னை சட்டசபைத் தலைவராக ஒரு சிவசண்முகம் அரசோச்சுகிறார்; இப்போது பரமேஸ்வரன் அமைச்சராகவும் ஆக்கப்பட்டிருக்கிறார்—எனினும், பழங்குடி மக்களை வைதீகர்கள் தடுத்து நிறுத்துகிறார்கள், காசியில்!

எவ்வளவு ஆணவம்! எத்தனை வன்னெஞ்சம்!! எங்கிருந்து பிறந்தது இந்தத் துணிவு? ஆளவந்தார்களின் போக்குதான் இந்தத் துணிவு, வெறும் 'பவதி பிக்ஷாந்தேஹிகளுக்கு' வந்ததற்குக் காரணம்!

அவர்கள், புண்ணை மறைத்திட புனுகு பூசுவதுபோல, முகத்தின் நீரோட்டம் குறைந்தவள் மினுக்குப் பொடி பூசி குலுக்கிக் காட்டி, குமரியாக நடிப்பதுபோல, சமூகத்திலே நாற்றமடிக்கும் அளவுக்கு அழுகிப் போய்க் கிடக்கும் எண்ணங்களையும், ஏற்பாடுகளையும், அழித்தொழித்துவிட்டு, பொன்னான புதுமைக் கருத்தைப் புகுத்தும் பொறுப்பும், மாண்பும் மிக்க செயலில் ஈடுபட மறுத்துவிட்டு, மேல் பூச்சு தேடும் வகைகெட்ட வேலையிலேயே தங்கள் முழுத் திறமையைக் காட்டுகிறார்கள்; நாட்டினரை ஏமாற்றி விடுவதாக அவர்கள் எண்ணுகிறார்கள்—உண்மையில் அவர்களே ஏமாறுகிறார்கள்!

'பக்தி'யைத் 'தாயம்' என்ற அளவுக்குக் கொண்டிருந்த போது, சுந்தப் பழங்குடி மகனை விரட்டி விரட்டி அடித்தார்களோ, அதே மகனுக்குப் பக்தியை இனி ஊட்டவும் இயலாதோ என்று பயப்படும் அளவுக்கு அவர்தம் மனப்போக்கு மாறிவிட்டது!

இப்போது, உரிமைக் கிளர்ச்சி நோக்குடனேயே அவர்களில் பெரும்பாலோர் காசிக் கோயிலிலும், மூடி வைக்கப்பட்டுள்ள வேறு சில கோயில்களிலும் நுழைந்தாக வேண்டும் என்று முழக்கமிடுகின்றனர். சழக்கர்கள் இதைத் தடுக்கிறார்கள்.

அடுத்த கட்டம், பழங்குடி மக்களும், அவர்தம் உரிமையைப் பெற்றுத் தந்தே தீரவேண்டும் என்ற பெருநோக்குடன் உள்ளவர்களும், கோயிலுக்குள்ளே நுழைவதை அல்ல, சழக்கர்களை கோயில்களிலிருந்து வெளியேற்றும் செயலுக்குச் சென்று தீருவார்கள்.

கோயில்கள், தூய்மையின் இருப்பிடம் என்பதால், அங்கு சென்று, கண்ணுக்கும், கருத்துக்கும் அறவிருந்து பெறவேண்டும் என்று அடியார்கள் அருள் பற்றி அழகுறப் பேசுகின்றனர்—ஆனால், கோயில்களோ!!

பண்டித நேரு வருகிறார் என்று தெரிந்ததும், தில்லைத் தலத்திலே மும்முரமாகவும், அவசர அவசரமாகவும் நடைபெறுகிற காரியம், கோயிலைக் குடி இருக்கும் இடமாகக் கொண்ட வௌவால் கூட்டத்தை விரட்டுவதும், அவைகளால் குவிக்கப்பட்டுக் கிடக்கும் புழுக்கைகளைக் கூட்டி எடுத்து வெளியே கொட்டுவதும், அதனால் உண்டான நாற்றத்தைப் போக்கக் கழுவுவதுமாக இருக்கிறது!! வேறு எதற்காக இல்லாவிட்டாலும், இதற்காகவாவது, தில்லையில் திருநடனம் புரியும் சபேசன், நேரு பண்டிதருக்கு நன்றி கூறிடலாம்!! கோயில்களின் நிலை இது—எனவே, அங்கு பழங்குடி மக்கள் போவதைத் தடுத்திடும் போக்கை நாம் கண்டிக்கிறோம் என்றால், உரிமைப் பிரச்னைக்காகத்தான்.

பழங்குடி மக்கள் காசி விசுவநாதரைக் காணச் செல்லக்கூடாது என்று, செருக்கு செல்லரித்த நிலையில் இருக்கும் போதுகூடத் துணிந்து, வைதீகர்கள் செய்கிறார்கள்.

ஆனால், இதோ, சென்னையில் கோயில்களுக்கே அமைச்சராகிறார், பழங்குடி பிறந்த பண்பாளர் பரமேஸ்வரன்! எந்த வைதீகரும் தடை கூற முடியாது. கோயில் மேளம் முழங்கும்; பூச்சக்கரக் குடை தூக்கி வருவர்; மரியாதை வேட்டுகள் கிளம்பும்; மணி ஓசையும் கேட்கும்; மாலை மரியாதை கிடைக்கும்; அர்ச்சகர்கள் அன்பைப் பொழிவர்; தர்மகர்த்தாக்கள் தழுதழுத்த குரலில் பேசுவர்—நந்தன் பட்ட இம்சைக்குப் பழிவாங்கும் படலம் போல பரமேஸ்வரன் புறப்படுகிறார்!

இவர் மட்டுமல்ல; அதிகார உயர்நிலை பெற்ற பழங்குடி மகனுக்கு உபசாரம் காட்டப்படுகிறது—ஆனால், மக்கள்?—அவர்கள் நிலை என்ன—தடுத்து நிறுத்தப்படுகிறார்கள், வைதீகர்களால்! ஏன்? பழமைப் பிணி போக்கப்படவில்லை.

ஆண்மையுடன், ஜகஜீவன்ராம், பேசிக் கொண்டு வருகிறார்— வர்ணாசிரமம் ஒழிக்கப்பட்டால்தான் பழங்குடி மக்களுக்கு உண்மையான விடுதலை, சமத்துவம் கிடைக்கும்,"—என்று!

அதைவிடத் தீரமாகப் பேசுகிறார், ராஜபோஜ்—"பார்ப்பனீயம் ஒழிக்கப்பட்டாக வேண்டும்," — என்று!

ஆம்! அது ஒழிக்கப்பட்டாலதான், காசியிலே காட்டுக் கூச்சலிடும் கனபாடிகளும், பூரியிலே சீறி எழும் சனாதனிகளும், தங்கள் ஆதிக்கம் அடியோடு ஒழிந்தது என்பதை அறிவர். அந்த அறிவிப்பு போதும் — அரவத்துக்கு இடி போலாகும்!

பழங்குடி மக்களின் உள்ளக் கொதிப்பை எடுத்துக் காட்டுவதுபோல், டில்லி பாராளு மன்றத்தின் எதிரே, பழங்குடி மக்களின் அணிவகுப்பு நின்று, "உரிமை பெறுவோம்! பெற்றே தீருவோம்!" என்று முழக்கமிட்டிருக்கிறது. இந்த முழக்கம் வலுவடைந்தால், வைதீகர்களின் வாய் வீச்சு சாயும்; பழமை மடியும்; புதுமை மலரும்; பொன்னொளி பரவும்!

## ஆந்திராவில் அவதி

### ரூ. 2 கோடி புகையிலை தேக்கம்

#### டில்லி ஆட்சியின் லட்சணம்

ஆந்திராவிலுள்ள குண்டூரில் ரூ 2 கோடிக்கு மேற்பட்ட புகையிலை கேட்பாரற்றுக் கிடப்பதாகத் தெரிய வருகிறது. முன்பெல்லாம் பிரிட்டனுக்கு புகையிலை அனுப்பப்படுமாம். இப்போது, பிரிட்டன், இந்தியாவிலிருந்து புகையிலை வாங்குவதில்லை. அதே போல முன்பு வியாபாரம் செய்துவந்த பல ஐரோப்பிய நாடுகள் இந்தியப் புகையிலையைச் சீந்துவதில்லையாம். இதற்கு இந்திய சர்க்காரின் போக்கே காரணம் என்று அவதிப்படும் வியாபாரிகள் தெரிவித்துள்ளனர்.

## ரங்கூனில் மக்கள் தொகை!

அண்மையில் நடைபெற்ற மக்கள் தொகை கணக்கெடுப்புப்படி ரங்கூன் நகரில் மட்டும் வசிப்போர் எண்ணிக்கை 7,37,079 என்று தெரிய வருகிறது. இதில் கடல் கடந்து சென்று வாழும் இந்திய—பாகிஸ்தான் மக்களின் எண்ணிக்கை, 1,40,396. கடந்த உலகப் போரில் இருந்த தொகையில், இப்போது அரை லட்சம் பேர் குறைந்திருக்கிறார்கள். ஆனால், அங்கே வாழும் சைனாக்காரர்களின் தொகை அதிகரித்துள்ளது. போருக்கு முன்பு அவர்கள் தொகை 30,000 இப்போது அவர்கள் எண்ணிக்கை 70,366.

## உங்கள் குறிப்புக்கு

புதுடில்லி, ஏப்ரல் 15—டில்லியில் டெலிபோன் மூலம் "சரியான நேரம் அறிவிக்கும்" சர்வீஸ் ஒன்றரை ஆண்டுகளுக்குமுன் ஆரம்பிக்கப்பட்டதிலிருந்து இன்றுவரை, அதன் மூலம் டெலிபோன் நிலையத்திற்கு மொத்தம் 4,00,000 ரூபாய்க்குமேல் வருமானம் கிடைத்துள்ளது.



# எச்சரித்தோம்—ஏளனம் செய்தனர்!

## 'ஆணவத்தின் நாச வேலை' கண்ட பின்னரே நிலைமையை உணர்ந்தனர்!

### 'ஆதிக்கப் பிடி' வட நாட்டிலுள்ளவரை நாட்டிற்கு நன்மை செய்ய நல்லவராலும் முடியாது!

ஈ. வி. கே. சம்பத் கூறும் காரணங்கள்

"யார்தான் சென்னை முதன் மந்திரியானாலும், சென்னை மாநிலத்தை இயக்குகிற, நேருவின் தலைமையில் அமைந்துள்ள வடநாட்டு ஆதிபத்தியக்காரர்களின் பிடியிலிருந்து நாம் விடுதலை பெறுகிற வரை, இந்த நாட்டு மக்களுக்கு நிரந்தரமான ஒரு நல்வாழ்வைப் பெற்றுத் தருவதற்காக நாம் கொண்டுள்ள லட்சியங்களும், அவைகளை அடைய நாம் வகுத்துள்ள கொள்கைகளும் ஈடேற முடியாது."

"இப்போது நாம் கவனிக்கவேண்டியது ஆச்சாரியார் நல்லவரா, காமராசர் நல்லவரா என்பதல்ல; ஓமந்தூராார்கூட நல்லவர் என்று நம்மாலேயே பாராட்டப்பட்டவர்தான்; ஆனால், அவர் இருந்த காலத்தில், அண்ணா அவர்களின் புத்தகங்கள் தடைபடுத்தப்படவில்லையா? உத்தமர் ஓமந்தூரார், கவர்னர்—ஜெனரலாய் இந்த நாட்டிலே பவனி வந்த ஆச்சாரியாருக்கு நாம் கருப்புக் கொடி பிடித்த நேரத்தில் தடிகொண்டு நம்மைத் தாக்கவில்லையா? ஆகவே யார் காங்கிரசின் சார்பில் ஆட்சிப் பீடத்திலிருந்தாலும்—ஆச்சாரியாராலும்—காமராசராலும், அவர்களால் நிர்ணயிக்கப்பட இயலாது இந்த நாட்டு மக்களின் எதிர்காலம்!"

"ஆட்சிப்பீடத்தில் அமர்பவர்கள் யாரானாலும், அவர்கள் எந்த அளவுக்கு, வடநாட்டுத் தொடர்பிலிருந்து தங்களைத் துண்டித்துக் கொள்கிறார்களோ, அந்த அளவில்தான் இந்த நாட்டு மக்களின் நல்வாழ்வு நிர்ணயிக்கப்பட முடியும். ஏனெனில், இங்கு அமைகிற எந்தவிதமான ஆட்சியையும் இயக்குகிற சக்தி—ஆதிக்கப் பிடி, வடநாட்டிலே இருக்கிறது."

"காமராசர் மட்டும் என்ன, நாம் அறப்போராட்டங்கள் நடத்தினால்—நம்மைத் தாறுமாறாக வசை பாடும் வடவருக்குப் புத்தி புகட்ட முற்பட்டால்—இந்த நாட்டு மக்களின் நெடுநாளையத் தேவைகளைப் பூர்த்தி செய்து, சிறந்ததோர் வாழ்வு தர வடநாட்டு ஆதிக்கத்தை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தால்—சும்மாவா இருப்பார்? அப்போதும் தடிகள் நம்மீது விளையாடலாம்; குண்டுகள் நமது தோழர்களின் இதயத்தோடு பேசலாம். யார் கண்டார்கள்—அவர் என்ன நடவடிக்கைகளை அப்போது மேற்கொள்வாரென்று!"

—இவ்வாறு 11—4—54ல், தஞ்சை மாவட்ட 2-வது தி மு கழக அரசியல் மாநாட்டைத் துவக்கி வைத்துப் பேசுகையில் தோழர் ஈ. வெ. கி. சம்பத் அவர்கள் குறிப்பிட்டார். (அவரது சொற்பொழிவின் பிற்பகுதி நேற்றைய இதழில் வெளிவந்துள்ளது) தொடர்ந்து அவர், தனது சொற்பொழிவில் கூறியதாவது:—

"கடந்த 9, 10 மாதங்களாக, தி. மு. கழகம், இம்மாதிரியான மாநாடுகளைத் தொடர்ந்து நடத்த இயலாது, தீவிரமான அரசியல் போராட்டங்களிலே ஈடுபட்டிருந்தது. நாம் போராட்டங்களுக்கு முன்னால் கைக்கொண்டிருந்த வேலை முறைகளில் மாறுதல் ஏற்பட்டது இன்று புதிய புதிய முறைகளை வகுத்துக்கொள்ள வேண்டியவர்களாயிருக்கிறோம்.

தமிழ்நாட்டு அரசியலில கடந்த இரண்டாண்டுக்குமுன் அவங்கிய கொந்தளிப்பு, சிறிது சிறிதாகப் பெருகி குமுறிக் கொண்டிருந்தது. அந்தக் குமுறல்தான் 10 மாதங்கட்குமுன் ஒரு உருவமாகி, முன்னேற்றக் கழகத்தை போர்க் களத்திலே இறங்கச் செய்தது. கடந்த 10 மாதங்களில் முன்னேற்றக் கழகம் பெரியதொரு பொறுப்பை ஏற்றுக்கொண்டிருந்ததால், கழகத்தின் தொண்டர்களுக்கு ஏராளமான வேலை; வேலை மட்டுமின்றி தொல்லையும் கூட ஏற்பட்டது.

ஆச்சாரியார் முதன் மந்திரி ஆனதும் நாட்டில் உள்ள எல்லோரும் எதிர்த்தனர்; நாமும் எதிர்த்தோம். தேர்தல் புயலை மக்களிடையே வீசிக்கொண்டிருந்தது; தேர்தலில் ஈடுபட்டவர்கள் எல்லாம், ஆயிரக்கணக்கான ரூபாய்களை தண்ணீர் எனச் செலவு செய்து, 'வெற்றி கிட்டுமா?' என்று ஏங்கிக் கிடந்த நேரத்தில், அன்பர் ஆச்சாரியார் குற்றால மலை அருவி அருகே அஞ்ஞான வாசம் செய்து கொண்டிருந்தார்.

தேர்தல்கள் முடிவுற்றன; முடிவுகளும் அறிவிக்கப்பட்டன. தேர்தலின்போது எங்கேயோ இருந்த அன்பர் ஆச்சாரியார் தான் முதன் மந்திரி என்று கவர்னர் மாளிகையிலிருந்து கன்னிரவிலே அறிக்கை ஒன்று வந்தது. இன்று, ஆச்சாரியாரை விரட்டிவிட்டு வெற்றி வாகை சூடியிருக்கும் காமராசர்கூட அன்று, ஆச்சாரியார் வந்தாலன்றி காங்கிரஸ் காப்பாற்றப்பட முடியாதென்றெண்ணினார்; அவரை முதன் மந்திரி ஆக்கினார்.

நாம் அப்போதே சொன்னோம்,—'ஜனநாயகத்தின் உயிர் துடிப்புள்ள அடிப்படை அம்சங்கள் ஆச்சாரியார் நியமனத்தால் படுசூரணமாகின்றன; மாசற்ற குடியரசு முறை களங்கப்படுத்தப்படுகிறது,'—என்று! ஆனால், நமது எச்சரிக்கைக் குரல் காங்கிரசாரால் ஏளனம் செய்யப்பட்டது.

அதன் பிறகு, ஆட்சிபீடத்தில் அமர்ந்த ஆச்சாரியாரின் விஷவேலைகள் ஒன்றொன்றாய் ஆரம்பமாயின. அவர் கொண்டிருந்த அளவில்லாத ஆணவம் அவரை நாசவேலைகள் பலவற்றிலே ஈவிரக்கமின்றி ஈடுபடுத்திற்று.

யாருக்கு, தான், முதன் மந்திரி என்று பறை சாற்றிக்கொண்டாரோ அவர்களையே, இந்த நாட்டு மக்களையே கேட்காது, அவர்களது அனுமதி பெறாது புதிய கல்வித் திட்டத்தை நுழைத்தார். நாட்டு மக்களின் கருத்தைத்தான் அறியவில்லை என்றால், அவர்களின் குரல்களாக சட்டசபையிலே உள்ள உறுப்பினர்களையாவது கேட்டாரா என்றால், இல்லை; எந்தக் காங்கிரஸ் இவர் வந்தாலன்றி சாகாதேதும் என்று அவர்கள் நம்பினரோ—இதாரும் சொன்னார்களே—அந்தக் காங்கிரசாரையாவது கேட்டாரா என்றால் அதுவும் இல்லை; போகட்டும், காங்கிரசைத்தான் கேட்கவில்லை; தான் அமைத்த மந்திரிசபையின் எண்ணத்தைத்தான் கேட்டாரா என்றால் அதுவும் இல்லை; எல்லாம் தானே—தன் இஷ்டம் போல் செய்வேன் என்று காரியங்களிலே ஈடுபட்டார்.

கம்யூனிஸ்டுகள் எதிர்த்தனர்; பிரஜா—சோஷலிஸ்டுகள் எதிர்த்தனர்; நாம் எதிர்த்தோம்; இன்னும் எத்தனையோ நல்லவர் எதிர்த்தனர்; இதில் இன்னும் புதுமை என்னவென்றால், ஓமந்தூரார், காமராசர் போன்ற காங்கிரசாரும் எதிர்த்தனர். ஆனாலும், எதிர்த்தவர்கள் எல்லாம் வாயளவிலே எதிர்த்தார்களே அன்றி, எதிர்த்து செயலாற்றும் துணிவைப் பெற்றிருக்கவில்லை; ஆனால் தி. மு கழகம் ஒன்றுதான் எதிர்த்துப் போரிட்டு வெற்றி காணும் ஆற்றலையும், வாய்ப்பையும் பெற்றிருந்தது. ஆணவம் கொண்டலைந்த ஆச்சாரியார், எத்தனைதான், எல்லா இடங்களிலும் எதிர்த்துச் சொன்னாலும் அவைகளைப் பொருட்படுத்தாது பிடிவாதமாக கல்வித் திட்டத்தை நடைமுறையில் வைத்திருந்தார்.

தி மு க-வின் தலைமையிலே தான், தங்கள் குறைகளைத் தீர்த்துக் கொள்ள முடியும் என்கிற தவிர்க்க முடியாத முடிவிற்கு இந்நாட்டு மக்கள் வரவேண்டியவர்கள் ஆனார்கள்; ஆகவே, அவர்களின் அபய நம்பிக்கைக்குப் பாத்திரமான நாம் போர்க்களத்திலே குதித்தோம்.

இன்று ஆச்சாரியார் மந்திரி சபை விரட்டப்பட்டு, காமராசர் மந்திரி சபை அமைவதினாலேயே நமது லட்சியங்கள் ஈடேறிவிட்டன என்று அர்த்தமல்ல; அப்படி யாரேனும், காமராசர் வந்ததினால், நாம் மகிழ்ந்திருக்கிறோம் — நமது லட்சியங்கள் கைகூடுமென்று சொன்னால் அது வடிகட்டின முட்டாள்தனமாகும்!

இப்போது ஏற்பட்டுள்ள மந்திரி சபை மாற்றம் காங்கிரசின் உள் கட்சிப் போராட்டம்—அவ்வளவு தான்!

ஆச்சாரியாரின் தலைமையை காங்கிரஸ் உறுப்பினர்கள் எத்தனை பேர் எதிர்த்தும் தலைமைக்கு மீண்டும் போட்டி ஏற்பட்டது; காமராசர் வந்திருக்கிறார்; வெற்றி பெற்று கட்சித் தலைவராகத் தேர்ந்தெடுத்துள்ள காமராசரை கவர்னர் அழைக்கவில்லை, மந்திரி சபை அமைக்குமாறு!—டெல்லி ஆலயத்திலிருக்கிற நேரு தேவதையின் ஆசி பெற்று வந்ததும்தான் மந்திரி சபை அமைக்க அழைக்கப்பட்டார்.

புதிதாகப் பதவிபெற்ற காமராசர் ஒன்றை மறந்துவிடக் கூடாது.

இன்று அவர் கட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதே—ஆச்சாரியார் அவரது வஞ்ச நெஞ்சத்தால் சர்வாதிகாரமாக நுழைத்த புதிய கல்வித் திட்டத்திற்கு நாட்டிலே ஏற்பட்ட மகத்தான கொந்தளிப்பும், காங்கிரஸ் கட்சியிலேயே ஏற்பட்ட எதிர்ப்பும் தான்! அந்த முறையில் அவர், நாட்டு மக்களுக்காக இல்லாவிட்டாலும் அவரைத் தேர்ந்தெடுத்துள்ள காங்கிரஸ் உறுப்பினர்களுக்காகவது புதிய கல்வித் திட்டத்தை உடன் திரும்பப் பெற்றாக வேண்டும்—அவரே கூட புதிய திட்டம் தகுமானது என்று கருத்தறிவித்திருக்கிறார். அதைக் காட்டியே இன்று ஆச்சாரியாரையும் விரட்டியடித்திருக்கிறார்."

# 'சிந்தி' மாநிலம் வேண்டும்

## காங்கிரசுக்குப் புதிய தலைவலி

### உரிமை உணர்ச்சி வளருகிறது

மொழி அடிப்படையிலும், இன அடிப்படையிலும், பிரதேச அடிப்படையிலும், உரிமை பெற வேண்டும் என்ற கிளர்ச்சி நாளாகவாக வலுத்து வருகிறது.

எவ்வளவுதான், காங்கிரஸ் மேலிடம் கட்டுப்பாட்டின் பேரால், கிளர்ச்சிகளை ஒடுக்கப் பார்த்தாலும், உரிமை வேட்கை குறைவதாகக் காணோம்.

கச்சு பகுதியில் அமைக்கப்படும், கண்ட்லா துறைமுகம் உட்பட, ஆயிரம் சதுரமைல் அளவுள்ள இடத்தை, சிந்தி மொழி பேசும் மாகாணமாக அமைத்துத் தர வேண்டுமென்ற கிளர்ச்சி இப்போது உருவாகிவிட்டது.

சிந்தி மக்களின் நல்வாழ்வு, மொழி அடிப்படையில் அரசு அமைக்கப்பட்டால்தான் சாத்தியமாகும் என்று வலியுறுத்தி சிந்தி வகுப்பின் பிரமுகர்கள் பலர், அறிக்கை வெளியிட்டு காங்கிரஸ் காரியதரிசிக்குத் தந்தி அனுப்பியிருப்பதாக ஆமதாபாத் செய்தி ஒன்று கூறுகிறது.

## விடத்திலாம்பட்டி தி.மு. கழக துவக்கவிழா

8—4—54ல், இவ்வூரில், தி. மு. கழகம் அமைக்கப்பட்டு, உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:— செயலாளர்:- கே. பி முகம்மது; துணைச் செயலாளர்: செ. பரசுராமன்; பொருளாளர்: கு. துரைசாமி; மாவட்டப் பிரதிநிதி: லச்சமன்; மற்றும் செயற்குழு உறுப்பினர்களாக 11 பேர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பின்னர், தோழர்கள் மா. இளங்கோ, என். செங்கோன், பீ. சு. இளமுருகு ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

## ஆலந்தூர் தி. மு. கழகம்

4—4—54ல், காலை 10-மணிக்கு கழக இல்லத்தில் பொது உறுப்பினர் கூட்டம் தோழர் இ. கோதண்டராமன் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் செயலாளராக திரு. மு தங்கவேலு அவர்களும், துணைச் செயலாளராக திரு. கே. எம். அருணாசலம் அவர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

## பூலாம்பாடி தி.மு. கழகம்

திட்டக்குடி, ஏப். 10—இவ்வூர் தி மு. கழகத்திற்குக் கீழ்கண்ட உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:-செயலாளர்: சோ. மருதை; துணைச் செயலாளர்: மு. நடராசன்; பொருளாளர்: ரா. சுப்புராமன்; மாவட்டப் பிரதிநிதி: ச. பெரியசாமி; செயற்குழு உறுப்பினர்கள்: மு. தங்கவேல், மு. செங்கமலம், ச. தங்கவேல், பெ. ஐயாசாமி, மு. பூமாலை, கு. முனியன் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## மாதுங்கா (பம்பாய்)

### தி. மு. கழக செயற்குழு கூட்டம்

4—4—54 மாலை 6½ மணிக்கு கழகக் கட்டிடத்தில், தோழர் பொன். தி. சபாபதி தலைமையில் செயற்குழுக் கூட்டம் நடைபெற்றது.

வரவு-செலவு கணக்குகள், கழக பொருட்கள் முதலியவை சரி பார்த்துப் புதிய தீர்மானங்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அதை எப்படுத்துவதற்கான நிதி திரட்டுவதற்கு 7 பேர் கொண்ட குழு நியமிக்கப்பட்டது. மாவட்டக் கழகப் பிரதிநிதிகளாக தோழர்கள் ஜெ. ஜோதிராமம், போ. தர்மராசன் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## மறைவு

"சைதை தி.மு. க. மாவட்ட உறுப்பினரும், பொதுக் குழு உறுப்பினருமான தோழர் பி. அன்னுமலை அவர்களின், ஆண் குழந்தை 5—4—54 அன்று இறந்ததை பெரும் துயருடன் அறிவிக்க வருந்துகிறோம்," என சைதை தி. மு க. செயலாளர் தெரிவிக்கிறார்.

# தமிழக ஆட்சிமொழி மாநாடு

—]o[—

## நிறைவேறிய தீர்மானங்கள் விவரம்

11—4—54 அன்று பெண்ணுகடத்தில் ஆட்சிமொழி மாவட்ட மாநாடு, முத்துக்குமரப் பூங்காவில், திரு. சபாபதி நாயகர் பி.ஏ., பி.எல் தலைமையில் நடைபெற்றது.

சென்னை முன்னாள் பிரதமர் ஓ. பி. ராமசாமி அவர்கள் மாநாட்டை ஆரம்பித்துவைத்துப் பேசுகையில், தமிழர்களுக்கு உணர்ச்சி வேண்டும்—உணர்ச்சி அதிகமாகவும் இருக்கக்கூடாது குறைவாகவும் இருக்கக் கூடாதென்றும், கடமையில் கருத்து, நேர்மை, நாணயம், ஒழுங்கு முறை, கட்டுப்பாடு இவைகளெல்லாம் வேண்டும் என்றும், தமிழ் ஆட்சிமொழியாக வேண்டுமென்றும் குறிப்பிட்டார்.

திரு. ஒ. ஆ. பெ. விசுவநாதம், கொடியேற்றி வைத்து, தமிழர்களின் சிறப்பு பற்றி பேசினர்.

வரவேற்புக் குழுத் தலைவர் திரு. சிவ. பழமலை அவர்கள் ஆற்றிய வரவேற்புரையில் கூறியதாவது:—

"நம்மோடு உரிமை பெற்ற இலங்கையில் சிங்கள மொழியும், தமிழும் ஆட்சி மொழியாக அமைந்துள்ளது என்றும், தமிழகத்துடன் இணைந்து வாழ்ந்து அண்மையில் பிரிந்த ஆந்திரம் தன் தாய்மொழியான தெலுங்கை ஆட்சிமொழியாக்கி நலமடைந்து வருகிறதென்றும், ஆகவே, நாமும் தமிழையே ஆட்சிமொழியாகக் கொள்ளவேண்டும் என்றும், தமிழ் ஆட்சிமொழியாக ஆக்கப்பட்டால், அறிவு அதிகரிக்க, நாகரீகம் ஓங்க, அரசியலை அறிந்துகொள்ள, ஒற்றுமை ஓங்க வழியேற்படும் என்றும், ஆகவே தமிழை ஆட்சி மொழியாக்க அரசியலார் ஆவன செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

தலைமை தாங்கிய திரு. சபாபதி நாயகர் அவர்கள், தலைமையுரை ஆற்றுகையில், தமிழ் ஆட்சிமொழியாவதற்கு சட்டம் இடந்தருகிறது என்றும், உயர்நீதி மன்றங்களில் மொழியால் ஏற்படப்போகும் சில சிக்கல்களை இப்பொழுதே நாம் விழித்திருந்து தவிர்க்க வேண்டும் என்றும், இல்லையேல், இந்தியில் எழுதவேண்டிய நிலை ஏற்படும் என்று எச்சரித்தார்.

திரு. வி. க. -வின் படத்தை திருக்கோவிலூர் வழக்கறிஞர் திரு. தியாகராஜ கோபாலசாமி திறந்து வைத்தார்.

திருவள்ளுவரின் படத்தை விருத்தாசலம் வழக்கறிஞர் அ. ரத்தினசபாபதி பிள்ளை திறந்து வைத்தார்.

பின்னர், திரு சுப்பையா அவர்கள் பேசுகையில், தமிழ்ப் பெயர்கள் பலவும் மாறிவிட்டன என்றும் அவைகளைக் கண்டுபிடித்து தமிழில் வழங்கவேண்டுமென்றும் கூறினர்.

—விருத்தாசலம் அருள் திரு இராமநாத அடிகளும் சொற்பொழிவாற்றினர்.

பின்னர், பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரை அவர்கள் தமிழின் தொன்மையினைப் பற்றி பல மேற்கோள்களைக் காட்டிப் பேசினர்.

பின்னர் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:

தமிழகத்துக்குத் தமிழ் மொழியே ஆட்சி மொழியாக வேண்டும் என்று சட்டம் இயற்றாத சட்ட சபை உறுப்பினர்களை வற்புறுத்தியும், ஆந்திரம் பிரிந்த பின், எஞ்சிய சென்னை மாநிலத்தை தமிழ் நாடு என்று பெயரிட வேண்டுமென்று ஆட்சியாளரைக் கேட்டுக்கொண்டும், சட்ட சபை நடவடிக்கைகளில் தமிழிலேயே பேசவேண்டுமென்று தமிழக உறுப்பினர்களைக் கேட்டுக் கொண்டும், அரசாங்கத்திற்கு எழுதும் கடிதப் போக்குவரத்து, விண்ணப்பங்கள் முதலியவைகளை தமிழிலேயே எழுதியனுப்ப வேண்டுமென்று மக்களைக் கேட்டுக்கொண்டும், வியாபாரக் கடிதங்கள், முகவரி, விளம்பரப் பலகைகள் முதலியவைகளை தமிழிலேயே எழுத வேண்டுமென்றும், தாய்மொழியாகிய தமிழ்மொழி ஆங்கிலேயர் ஐப்பானியர் செய்து இருப்பதைப் போல் சொற்களைச் சுருக்கி, இளைஞர் படித்து முன்னேற்றம் அடைய ஒரு திட்டம் கொண்டு வர வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொண்டும், மக்கள் நாடு, மொழி, நலங்கருதி, ஒரு தமிழ்ப் பேரவையை அமைக்க வேண்டுமெனவும், ஆணுக்கும், பெண்ணுக்கும் அடைமொழிச் சொற்களாக "திரு" என்று குறிப்பிட வேண்டுமென அரசியலாரை கேட்டுக் கொண்டும், அண்டைப்பட்டுக்கிடக்கும் தமிழகப் பகுதிகளைத் தமிழகத்தோடு சேர்க்கவேண்டும் என்றும் திருக்குறளை மொழி பெயர்க்கும் பணியை ஐ. நா. கழகம் தொடங்கியிருப்பதற்கு நன்றி செலுத்தி, அப்பணியை தமிழறிஞர் குழுவினரிடம் ஒப்படைக்கும்படி ஐ. நா.-வை கேட்டுக்கொண்டும், காமராசர் சட்டசபை காங்கிரஸ் கட்சித் தலைமை பதவி ஏற்றுக்கொண்டதைப் பாராட்டியும் தீர்மானங்கள் நிறைவேறின.

குறிப்பு:— வரவேற்புக் குழுவின் சார்பில், திரு. வி. க. மணி மண்டப நிதிக்காக ரூ. 100 அளிக்கப்பட்டது.

---

## உப்பு தொழிலாளர் வெற்றி

அறந்தாங்குடி, ஏப். 13—

"11—4—54 அன்று உப்புத் தொழிலாளர் சங்கக் கூட்டம் கூடி குறைந்த சம்பளம் (1—2—0, 1—4—0) கொடுக்கக் கூடிய முதலாளிகளின் அளங்களில் வேலை நிறுத்தம் செய்வதென முடிவு செய்து 12-4-54-ல் வேலை நிறுத்தம் செய்தனர். உடனே தொழிலாளர் தலைவர்களும், முதலாளிகளும் கலந்து பேசி, ரூ. 1—2—0, 1—4—0 கொடுத்து வந்த முதலாளிகள் 1—10—0, 1—12—0 சம்பளம் கொடுக்க ஒப்புக் கொண்டதால், 13—4—54-ல் தொழிலாளர்கள் வேலைக்கு சென்றனர்." (ஓ. நி.)

---

3 1953-ல், கள்ளத்தனமாகக் கடத்தப்பட்ட, சுமார் 25,40,000 ரூபாய் பெறுமான முன்ன 31,250 தோலா தங்கம் சுங்க அதிகாரிகளால் பறிமுதல் செய்யப்பட்டது.

---

## சொற் பயிற்சிக் கூட்டம்

18—4—54 இரவு 7 மணி அளவில், சேலம், அம்மாப்பேட்டை 22-வது பகுதி தி. மு. கழக அலுவலகத்தில் சொற் பயிற்சிக் கூட்டம் நடைபெறும். தோழர்கள் இதனையே அழைப்பாகக் கொண்டு கலந்து கொள்ளக் கோரப்படுகிறது.

---

## ஆத்தூர் வட்ட தி. மு. கழகத் தோழர்கட்கு

"செம்பட்டி தி. மு. கழக உறுப்பினர்கள் செய்த முடிவுப்படி 18—4—54 ஞாயிற்றுக்கிழமையன்று ஆத்தூர் வட்டாரத்தில் தி. மு. கழகம் அமைப்பது பற்றி ஆலோசிக்க வேண்டியுள்ளது. செம்பட்டி முசாபரி பங்களாவில் நடைபெறும் கூட்டத்திற்கு ஆத்தூர் வட்டார கிளைக் கழகச் செயலாளர்கள், தொண்டர்கள் அனைவரும் இதையே அழைப்பாகக் கருதி வருகை தருமாறு கோருகிறேன்," என்று செம்பட்டி தி. மு. கழக செயலாளர் ஆர். எம். ஆண்டவர் அறிவிக்கிறார்.

---

## சென்னை மாவட்ட தி. மு. கழக செயற் குழு கூட்டம்

"18-4-54 ஞாயிறு மாலை 4 மணிக்கு, சென்னை மாவட்ட தி. மு. கழக செயற் குழுக் கூட்டம் இராயபுரம் அறிவகத்தில் நடைபெறும். உறுப்பினர்கள் அனைவரும் தவறாது கலந்துகொள்ள வேண்டுமென கேட்டுக் கொள்கின்றேன்," என்று, சென்னை மாவட்டச் செயலாளர் தோழர் கே. எம். சண்ணபிரான் அறிவிக்கிறார்.

பொருள்:—சென்னை மாவட்ட துணைச் செயலாளர் தேர்தல்.

---

## கே. எஸ். பாண்டியன் படிப்பகம்

18—4—54 ஞாயிறன்று சென்னை, திருவல்லிக்கேணியிலுள்ள மேற்படி படிப்பகத்தில், தோழர் பி. ஆர். கோகுலகிருட்டினன் தலைமையில் சொற் பயிற்சிக் கூட்டம் துவக்கி வைக்கப்படும். 'நமது கடமை, என்ற பொருள்பற்றி உறுப்பினர்கள் சொற்பொழிவாற்றுவர்.

---

## சென்னைத் திருவள்ளுவர் கழகம்

சித்திரை மாதச் சொற்பொழிவு

17-4-54 மாலை 6-30 மணிக்கு, புரசை, அன்னதான சமாச மண்டபத்தில், புலவர் ம. கன்னன் அவர்கள் 'திருக்குறள்-அரசியல்' என்பது பற்றிப் பேசுவார்.

---

## குறள் வகுப்பு

18—4—54 ஞாயிறு காலை 10 மணிக்கு பெரம்பூர் செம்பியம் 20-வது வட்டம் தி. மு. கழகச் சார்பில், 115, கடைத் தெரு (மாடிவீச்) கழக இல்லத்தில், ஆசிரியர் ச. மாணிக்கம் அவர்களால் "குறள் வகுப்பு நடைபெறும்.

---

## நினைவுக் கல் நாட்டல்

இயற்கையெய்திய திருச்சி என். சங்கரன் அவர்களுக்கு நினைவுக் கல் நாட்டல் 19-4-54 திங்கட்கிழமை காலை 8 மணிக்கு, திருச்சி தி. கோ. காவேரி ரோடு தேவதானம் ரயில்வே கேட்டுக்கு அருகிலுள்ள இடத்தில் நடைபெறும். அதுபோது பெரியார் ஈ. வெ. ரா., டாக்டர் ஈ. மதுரம், எம். பி., ஏ. ராமசாமித் தேவர், எம். எல். ஏ., சி. என். அண்ணாதுரை ஈ. வெ. கி. சம்பத், எம். கே. தியாகராஜ பாகவதர் ஆகியோர் கலந்துகொள்வர்.

---

## திருமணங்கள்

18—4—54 ஞாயிறு காலை 7-30 மணிக்கு, சென்னை, சேத்துப்பட்டு ஜெகநாதபுரம் 3-வது வீதி, 16-வது எண்ணுள்ள இல்லத்தில், தோழர் புலவர் கன்னன் தலைமையில், தோழர் என். கே. சின்னராஜிக்கும்-தோழியர் ஜி. ரஞ்சிதம் அம்மைக்கும் வாழ்க்கை ஒப்பந்தம் நடைபெறும். இத்திருமணத்தை முன்னிட்டு 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ 1 நன்கொடையாக அளிக்கப்பட்டது-வரப்பெற்றோம்- நன்றி புடையது—பொறுப்பாளர்.

* * *

18—4—54 ஞாயிறு காலை 7-30 மணிக்கு, சென்னை, சிந்தாதிரிப்பேட்டை சிங்கண்ணசெட்டி வீதி, 2-வது சந்து, 4-வது எண்ணுள்ள இல்லத்தில், தோழர் எம். பழனிக்கும் — தோழியர் தனலட்சுமிக்கும் வாழ்க்கை ஒப்பந்தம் தோழர் காஞ்சி-கலியாணசுந்தரம் தலைமையிலும், தோழர் என். வி. நடராசன் முன்னிலையிலும் நடைபெறும்.

---

# கழகக் கூட்டங்கள்

★

## ஈரோடு

18—4—54 மாலை 7 மணிக்கு

இடம்: பார்க் ரோடு, பெரியார் திடல்

தலைவர்: ஈ. வெ. கி. சம்பத்

பேசுபவர்: மு. கருணாநிதி

18—4—54 ஞாயிறு காலை 10 மணிக்கு, கலா மன்றத்தின் ஆண்டு விழாவில், தோழர் எஸ். ஆர். சந்தானம் தலைமையில், தோழர் மு. கருணாநிதி சொற்பொழிவாற்றுவார்

★

## திருப்புத்தூர்

(இராமநாதபுரம் மாவட்டம்)

18—4—54 மாலை 6 மணிக்கு

இடம்: தேரடித் திடல்

தலைவர்: ச. ரா. சி. சின்னசாமி பாண்டியன்

பேசுபவர்: இரா. நெடுஞ்செழியன்

★

## சங்கரநயினார்கோவில்

18—4—54 இரவு 7 மணிக்கு

இடம்: மாதாங்கோவில் தெரு (பன்னீர் செல்வம் திடல்)

தலைவர்: டி. ஆர். சுப்பிரமணியம்

பேசுபவர்: தில்லை-வில்லாளன்

★

## சென்னப்பநாயக்கன் பாளையம்

18—4—54 மாலை 5 மணிக்கு

தலைவர்: கே. ஜி. சாமிநாதன்

பேசுவோர்:
என். வி. நடராசன்
இரே. இளம்வழுதி

★

## திருவள்ளூர்

18—4—54 மாலை 6 மணிக்கு

இடம்: தர்கா மைதானம்

பேசுவோர்: ஏ. எல். சி. கிருஷ்ணசாமி

★

## சாத்தூர்

18—4—54 மாலை 6½ மணிக்கு

தலைவர்: ஈ. வி. ஏ. வள்ளிமுத்து

பேசுவோர்:
கோவை செழியன்
ஆர். பி. சன்யாட்சேன்
கதிரேசன்
ஆர். பழனிசாமி

★

## திண்டுக்கல்

18—4—54 மாலை 6½ மணிக்கு

இடம்: வ. உ. சி. திடல்

பேசுவோர்:
கே எஸ். சந்தானம்
எஸ். கேமோறன்

---

## மதுரை முத்து படிப்பக ஆண்டு விழா

18—4—54 ஞாயிறு காலை 10 மணிக்கு. முத்து படிப்பக ஆண்டு விழா செல்லம் தியேட்டரில், தோழர் இரா. நெடுஞ்செழியன் அவர்களால் துவக்கி வைக்கப்பெறும். தோழர்கள் நெல்லை அலிசேக் மன்சூர். முகவை ஆர். எஸ். பாண்டியன் ஆகியோர் அன்று மாலை நடைபெறும் பொதுக் கூட்டத்தில் சொற்மொழிவாற்றுவர்.

---

## வட ஆற்காடு மாவட்ட தி. மு. கழக செயற்குழு கூட்டம்

நிறைவேறியத் தீர்மானங்கள்

4—4—'54 ல், களம்பூரில், தோழர் ஏ. எல். சி. கிருட்டிணசாமி தலைமையில் நடைபெற்ற செயற் குழுவில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:—

திரு. வி. க., வி. வி. தனுஷ்கோடி, என் முத்தய்யா ஆகியவர்கள் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்தும், ரயில் நிறுத்தப் போராட்டத்தில் 26 தோழர்கள் மீது வாலாஜா போலீசாரால் தொடர்ந்த வழக்கை உடனடியாக விசாரித்து முடிக்க வேண்டுமென்று வற்புறுத்தியும், விவசாயிகளிடம் அரசாங்கம் கடனை வசூலிக்க அறிதப்படுத்துவதை ஒத்திவைக்கும்படியும், கடனைப் பல தவணைகளாக வசூலிக்கக் கோரியும், பிரெஞ்சிந்திய இணைப்புக் கோரிக்கையை ஆதரித்தும், களம்பூரில் நடைபெறும் உரிமைக் கிளர்ச்சியை ஆதரித்தும், அவர்கள் மீது போலீசார் கையாண்ட அடக்குமுறையைக் கண்டித்தும், அதிகார பற்றற்ற குழு ஒன்றை நியமித்து களம்பூரில் உண்மை நிலையை அறிந்து அடக்குமுறை வீசிய அதிகாரிகள் மீது தக்க நடவடிக்கை எடுத்து கொள்ள அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டும், விவசாயிகள் மீதுள்ள வழக்கை வாபஸ் பெற வேண்டுமென்றும், வ. ஆ. கலெக்டர் மத்தியஸ்தத்தில் விவசாயிகளுக்கும், மிலச்சுவான்தாருக்கும் ஏற்பட்ட பங்கு ஒப்பந்தத்தை மீறிய மிலச்சுவான்தாரர் போக்கைக் கண்டித்தும், அவர்கள் மீது தக்க நடவடிக்கை எடுக்கும்படி கேட்டுக் கொண்டும், விவசாயிகளுக்கு தொல்லை கொடுத்து வரும் போலீசை உடனடியாக வாபஸ் வாங்க கோரியும், தஞ்சை விவசாயிகள் சட்டத்தை வட ஆற்காடு மாவட்டத்திற்கும் விஸ்தரிக்கும்படி கேட்டுக் கொண்டும், களம்பூர் விவசாயிகள் பிரச்சினை குறித்து, சமுகமான முடிவேற்படுத்த மாவட்ட தி. மு கழகச் சார்பில், ஒரு ஆறுக்குழு கலெக்டரைக் கண்டு ஆவன செய்ய தீர்மானித்தும், களம்பூர் விவசாயிகள் பற்றி சென்னையில் ஒரு கண்டனக் கூட்டம் நடத்த பொதுச் செயலாளரைக் கேட்டுக் கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

---

## திருத்தணி தி. மு. கழகம்

10—4—54 மாலை 4 மணியளவில், தோழர் சி. நாராயணசாமி தலைமையில் நடைபெற்ற தி. மு. கழகக் கூட்டத்தில், தோழர் இர. இராசசேகரன் செயலாளராகவும், வயி. தமிழ்ச்செல்வன் துணைச் செயலாளராகவும், தி. தவசுமுத்து பொருளாளராகவும், வே. ஆறுமுகம் மாவட்டப் பிரதிநிதியாகவும், மற்றும் 13 பேர் செயற்குழு உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

திருச்சி தி. மு. கழகப் பொதுக் குழுவின் முடிவை ஏற்பதென்றும், சித்தூர் மாவட்ட தமிழர் கிளமிட்டிக் குழுவிற்கு நம்மாலான உதவியைச் செய்வதென்றும், பிரெஞ்சிந்தியப் போராட்டத்திற்கு ஆதரவு அளிப்பதென்றும், மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டது.

---

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால், அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று (24, குறிப்பு நாராயண செட்டித் தெரு, இராயபுரம்) வெளியிடப்படுகிறது. ஆசிரியர்: சி. என். அண்ணாதுரை, எம். ஏ.,

